


# சொல்வயல்

திங்கள் மின்னிதழ்

சொல்வளமே மொழிவளம் நெல்வளமே நாட்டின்வளம்

" சொற்குவை தேரும் பாவலர் மேவத் தொகுப்பீடம்"
(திருவிளையாடற்புராணம்–
தருமிக்குப் பொற்கிழியளித்த படலம்)

ஐ.எஸ்.பி.என் (ISBN): 978-81-958032-0-0

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தின் வெளியீடு

வயல் : 6 விளைச்சல் : 59 திருவள்ளுவர் ஆண்டு 2056, மேழம் – ஏப்ரல் – 2025

• விதை ஆய்வுத்துறைக் கலைச்சொற்கள்
• பன்முகப் பார்வையர் பாவாணர்
• கோள்களின் பெயர்க் காரணமும் பூவுலகும்
• கடிதாய் ஓடு
• உணர்தலும் உணர்த்தலும்
– உரியியலின் கருத்தாடல் நோக்கு
• இயக்ககச் செயற்பாடுகள்

# கட்டடவியல் துறைக் கலைச்சொற்கள்

| | | |
|---|---|---|
| Basement | – | அடித்தளம் |
| Beam | – | உத்தரம் |
| Brick | – | செங்கல் |
| Brittleness | – | உடையும் தன்மை |
| Camber | – | நடுவ உயரம் |
| Cement | – | பைஞ்சுதை |
| Concrete | – | கற்காரை |
| Drawn pipes | – | கழிவுக் குழாய் |
| Elasticity | – | மீள்மை |
| Engineering mechanics | – | பொறியியல் கம்மியம் |
| Fly shoring | – | முட்டுக்கொடுத்தல் |
| Gradient | – | சரிவு |
| Graphic statics | – | வரைகலை நிலையியல் |
| Hydraulics laboratory | – | நீரியல் ஆய்வகம் |
| Instrument mechanic | – | கருவிக் கம்மியர் |
| Irrigation engineering | – | பாசனப் பொறியியல் |
| Mallebility | - | தகடாகுகை |
| Neutral axis | – | நடுநிலை அச்சு |
| Placing supply order | – | வழங்க ஆணையிடல் |
| Plinth area | – | புறத்தளப் பரப்பு |
| Quantity surveying | – | பரும அளவியல் |
| Stair case | – | மாடிப்படி அமைப்பு |
| Structural engineering | – | அமைப்புப் பொறியியல் |
| Survey laboratory | – | நில அளவை ஆய்வகம் |
| Survey practical | – | நில அளவைச் செய்முறை |

**சொற்குவை (sorkuvai.com) வலைத்தளத்தில் தமிழுக்கு நிகரான ஆங்கிலச் சொற்களையும், ஆங்கிலத்திற்கு நிகரான தமிழ்ச்சொற்களையும் பார்த்துப் பயன்கொள்ளலாம்.**


# சொல்வயல்

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தின் வெளியீடு
திருவள்ளுவர் ஆண்டு 2056, மேழம் (சித்திரை)
ஏப்பிரல் – 2025

ஆசிரியர் : திருமதி க. பவானி
இயக்குநர் (மு.கூ.பொ.)

பொறுப்பாசிரியர் : முனைவர் வே. கார்த்தி

இதழ்க்குழு : திரு. கி. இராமர்
திரு. ஏ. காந்தி
திருமதி. க. கத்தூரி



செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம்
முதல் தளம், நகராட்சி நிருவாக அலுவலகக் கட்டடம்,
எண்.75, சாந்தோம் நெடுஞ்சாலை, எம்.ஆர்.சி. நகர்,
சென்னை – 600 028.
மின்னஞ்சல் : solvayal@gmail.com
வலைத்தளம் : www.sorkuvai.com

Directorate of Tamil Etymological Dictionary Project,
First floor, Urban Administrative office Campus,
No:75,Santhome high Road,
MRC Nagar, Chennai–28
Mail id : solvayal@gmail.com
Website : www.sorkuvai.com



ஐ.எஸ்.பி.என் (ISBN):978-81-958032-0-0

நாள்: 08.11.2022

# தமிழ் அகராதியியல் நாள் விழா -2024!

## மாண்புமிகு தமிழ் வளர்ச்சி மற்றும் செய்தித்துறை அமைச்சர் திரு. மு.பெ.சாமிநாதன் அவர்கள் பங்கேற்று

## ரூ. 16,21,000/- மதிப்பிலான விருதுகளை வழங்கிச் சிறப்பித்தார்!

"தமிழ் அகராதியியலின் தந்தை" என்று போற்றப்படும் வீரமாமுனிவரின் தமிழ்த்தொண்டைப் போற்றும் வகையில், செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தால், "தமிழ் அகராதியியல் நாள் விழா" கொண்டாடப்பட்டுவருகிறது.

அந்தவகையில் 2024 ஆம் ஆண்டுக்கான "தமிழ் அகராதியியல் நாள் விழா" சென்னை, வாலாசா சாலையில் அமைந்துள்ள கலைவாணர் சிற்றரங்கத்தில் 25.03.2025ஆம் நாள் சிறப்புற நடைபெற்றது. இவ்விழாவில், மாண்புமிகு தமிழ்வளர்ச்சி மற்றும் செய்தித்துறை அமைச்சர் திரு. மு.பெ. சாமிநாதன் அவர்கள் பங்கேற்று, ரூ. 16,21,000/– மதிப்பில் 2024 ஆம் ஆண்டுக்கான "தேவநேயப் பாவாணர் விருது" "வீரமாமுனிவர் விருது" "தூயதமிழ்ப் பற்றாளர் விருது", "தூயதமிழ் ஊடக விருது", "நற்றமிழ்ப் பாவலர் விருது" ஆகிய விருதுகள், தங்கப் பதக்கங்கள், தகுதியுரைகள், பயனாடைகள் ஆகியவற்றை வழங்கி, விழாப் பேருரையாற்றிச் சிறப்பித்தார்.

விழாவில் தமிழ்வளர்ச்சி மற்றும் செய்தித்துறை அரசு செயலாளர் திரு. வே. ராஜாராமன் இ.ஆ.ப., அவர்கள் முன்னிலையுரையாற்றினார். தமிழ்வளர்ச்சி இயக்கக இயக்குநர் முனைவர் ந. அருள் அவர்கள் வரவேற்புரை வழங்க, அகரமுதலி இயக்கக இயக்குநர் (மு.கூ.பொ.) திருமதி க. பவானி அவர்கள் நோக்கவுரையாற்றினார்.

முன்னதாக, காலையில் நடைபெற்ற தமிழ் அகராதியியல் நாள் விழாக் கருத்தரங்கில் சொல்லாய்வறிஞர் ப. அருளி, பேராசிரியர் ப. மருதநாயகம், மாநிலக் கல்லூரி மேனாள் ஆங்கிலப் பேராசிரியர் முனைவர் வெ. முருகன், சென்னைக் கிறித்தவக் கல்லூரி மேனாள் கலைப்புல முதன்மையர் முனைவர் மோசசு மைக்கல் பாரடே ஆகிய தமிழாளுமைகள் பங்கேற்று அகரமுதலி, கலைச்சொல்லாக்கம் உள்ளிட்ட பொருண்மைகளில் கருத்துரை வழங்கினார்கள்.

விருது வழங்கும் விழாவின் தொடக்கமாக, தமிழ்நாடு இசை மற்றும் கவின்கலைப் பல்கலைக் கழக மாணவர்களின் மங்கல இசைநிகழ்ச்சியும், செல்வி ஆராவின் நாட்டிய நிகழ்ச்சியும் நடைபெற்றன.

விழாவில் விருதுபெற்றோர் விவரங்கள்

| வ.எண் | விருதின் பெயர் | விருதாளர்கள் |
|---|---|---|
| 1. | தேவநேயப் பாவாணர் விருது – 2024<br>(ஒரு சவரன் தங்கப் பதக்கம்,<br>விருதுத் தொகை – ரூ. 2,00,000/–<br>தகுதியுரை மற்றும் பொன்னாடை) | திரு. பா. ரா. சுப்பிரமணியன் |
| 2. | வீரமாமுனிவர் விருது – 2024<br>(ஒரு சவரன் தங்கப் பதக்கம்,<br>விருதுத் தொகை – ரூ. 2,00,000/–<br>தகுதியுரை மற்றும் பொன்னாடை) | முனைவர் இரா.கு. ஆல்துரை |
| 3. | நற்றமிழ்ப் பாவலர் விருது – 2024 | |
| | மரபுக்கவிதை<br>(விருதுத் தொகை – ரூ. 50,000/–<br>தங்கப் பதக்கம் – (ரூ.25,000/–)<br>தகுதியுரை மற்றும் பொன்னாடை) | முனைவர் மு. இளங்கோவன் |
| | புதுக்கவிதை<br>(விருதுத் தொகை – ரூ. 50,000/–<br>தங்கப் பதக்கம் – (ரூ.25,000/–)<br>தகுதியுரை மற்றும் பொன்னாடை) | முனைவர் பெ. அசோகன் |
| 4. | தூயதமிழ் ஊடக விருது – 2024 | |
| | அச்சு ஊடகம்<br>(விருதுத் தொகை – ரூ. 50,000/–<br>தங்கப் பதக்கம் – (ரூ.25,000/–)<br>தகுதியுரை மற்றும் பொன்னாடை) | முகம் மாத இதழ் |
| 5. | தூயதமிழ்ப் பற்றாளர் விருது – 2024<br>விருதுத் தொகை – ஒவ்வொருவருக்கும் ரூ.20,000/–<br>பாராட்டுச் சான்றிதழ் மற்றும் பொன்னாடை | |
| | பற்றாளர் பெயர் | மாவட்டம் |
| | முனைவர் து. சேகர் | அரியலூர் |
| | திருமதி ஜோ. கேத்ரின் மெட்டில்டா | இராணிப்பேட்டை |
| | நல்லாசிரியர் தே. தமயந்தி | இராமநாதபுரம் |
| | முனைவர் வ.சு.யசோதா | ஈரோடு |

| | | |
|---|---|---|
| | திரு. உ. ஜெகஜீவன்ராம் | கடலூர் |
| | திரு. மு. மகேஷ்வரன் | கரூர் |
| | செல்வி ச. ஐஸ்வர்யா | கள்ளக்குறிச்சி |
| | திரு. வினோராஜ், லா. (எ) தமிழ்வினோ | கன்னியாகுமரி |
| | திரு. சி. கதிர்பாரதி | காஞ்சிபுரம் |
| | முனைவர் நா. பழனிவேலு | கிருட்டினகிரி |
| | திரு. மு.பெ. இராமலிங்கம் | கோயம்புத்தூர் |
| | திரு. சேதுபதிராஜா, தெ. | சிவகங்கை |
| | திருமதி ஞான. ஷைலா மேரி | செங்கல்பட்டு |
| | திரு. த. சுப்பிரமணி | சென்னை |
| | திரு. அ. கோவிந்தன் | சேலம் |
| | திரு. தீ. ஹரிதாஸ் (எ)<br>கோட்டை அம்பிதாசன் | தஞ்சாவூர் |
| | முனைவர் தா. பேகம் | தருமபுரி |
| | திரு. அ. ஷாஜஹான் | திண்டுக்கல் |
| | திருமதி சா. ச. பிருந்தா | திருச்சிராப்பள்ளி |
| | திரு. ந. ஜெயபாலன் | திருநெல்வேலி |
| | முனைவர் மு. முஜிபுர்ரகுமான் | திருப்பத்தூர் |
| | திரு. கொழுமம் ஆதி (எ)<br>கொழுமம் ஆ. திருமுருகன் | திருப்பூர் |
| | செல்வி வெ. ஆனந்தி | திருவண்ணாமலை |
| | திரு. அ.கோ. பாஸ்கரன் | திருவள்ளூர் |
| | செல்வி த. வீரச்செல்வி | திருவாரூர் |
| | திருமதி ந. வனசெல்வி அரவிந்தன் | தூத்துக்குடி |

| | | |
|---|---|---|
| | செல்வி க. சுபத்ரா | தென்காசி |
| | திரு. வீ. அதிவீரபாண்டியன் | தேனி |
| | செல்வி அ. அமுதசுரபி | நாகப்பட்டினம் |
| | திரு. வினோ (எ) வினோத் சுந்தரராசு | நாமக்கல் |
| | செல்வன் அருள் பெனடிக்ட், அ. | நீலகிரி |
| | திரு. மு. இராஜதுரை | புதுக்கோட்டை |
| | முனைவர் த. மாயக்கிருட்டிணன் | பெரம்பலூர் |
| | திரு. ச.வே. மருது பகவதி | மதுரை |
| | திரு. நா. சத்தியப்பிரியன் | மயிலாடுதுறை |
| | திரு. மு. தவசிமுத்து | விருதுநகர் |
| | திரு. இரா. ஆசைத்தம்பி | விழுப்புரம் |
| | திருமதி சி. கலைவாணி | வேலூர் |

26.03.2025ஆம் நாள் நடைபெற்ற தமிழ் அகராதியியல் நாள் விழாக் கருத்தரங்கின் இரண்டாம் நாளில், தமிழ் – இந்தோ – ஐரோப்பிய வேர்ச்சொல் ஒப்பீட்டு அகராதித் திட்டத்தின் முதன்மைப் பதிப்பாசிரியர் முனைவர் கு. அரசேந்திரன், சென்னைப் பல்கலைக் கழகத் தமிழ்த்துறைத் தலைவர் முனைவர் ய.மணிகண்டன், தேனித் தமிழ்ச் சங்கச் செயலாளர் திரு. மு. சுப்பிரமணி, கிருட்டினகிரி அரசு ஆடவர் கலைக்கல்லூரியின் கௌரவ விரிவுரையாளர் முனைவர் தா. பேகம் ஆகியோர் கருத்துரை வழங்கினார்கள்.

இவ்விழாவில், அரசு அலுவலர்கள், அகராதியியல் வல்லுநர்கள், விருதாளர்கள், தமிழறிஞர்கள், ஆய்வாளர்கள், மாணவ–மாணவியர் மற்றும் தமிழார்வலர்கள் உள்ளிட்டோர் பங்கேற்றுச் சிறப்பித்தனர்.

# தமிழ் அகராதியியல் நாள் விழா – 2024















## தேவநேயப் பாவாணர் விருது – 2024



திரு. பா. ரா. சுப்பிரமணியன்

## வீரமாமுனிவர் விருது – 2024




முனைவர் இரா.கு. ஆல்துரை

## நற்றமிழ்ப் பாவலர் விருது – 2024
## மரபுக்கவிதை




முனைவர் மு. இளங்கோவன்

## நற்றமிழ்ப் பாவலர் விருது – 2024
## புதுக்கவிதை




முனைவர் பெ. அசோகன்

## தூயதமிழ் ஊடக விருது – 2024
## அச்சு ஊடகம்




'முகம்' மாத இதழ்

# தூயதமிழ்ப் பற்றாளர் விருது – 2024



முனைவர் து. சேகர்
அரியலூர்




திருமதி ஜோ. கேத்ரின் மெட்டில்டா
இராணிப்பேட்டை



நல்லாசிரியர் தே. தமயந்தி
இராமநாதபுரம்



முனைவர் வ.சு.யசோதா
ஈரோடு



திரு. உ. ஜெகஜீவன்ராம்
கடலூர்



திரு. மு. மகேஷ்வரன்
கரூர்



செல்வி ச. ஐஸ்வர்யா
கள்ளக்குறிச்சி



திரு. வினோராஜ், லா. (எ) தமிழ்வினோ
கன்னியாகுமரி



திரு. சி. கதிர்பாரதி
காஞ்சிபுரம்



முனைவர் நா. பழனிவேலு
கிருட்டினகிரி



திரு. மு.பெ. இராமலிங்கம்
கோயம்புத்தூர்



திரு. சேதுபதிராஜா, தெ
சிவகங்கை



திருமதி ஞான. ஷைலா மேரி
செங்கல்பட்டு



திரு. த. சுப்பிரமணி
சென்னை



திரு. அ. கோவிந்தன்
சேலம்



திரு. தீ. ஹரிதாஸ் (எ)
கோட்டை அம்பிதாசன்



முனைவர் தா. பேகம்
தருமபுரி



திரு. அ. ஷாஜஹான்
திண்டுக்கல்




திருமதி சா. ச. பிருந்தா
திருச்சிராப்பள்ளி



திரு. ந. ஜெயபாலன்
திருநெல்வேலி




முனைவர் மு. முஜிபுர்ரகுமான்
திருப்பத்தூர்



திரு. ஆ. திருமுருகன்
திருப்பூர்



செல்வி வெ. ஆனந்தி
திருவண்ணாமலை



திரு. அ.கோ. பாஸ்கரன்
திருவள்ளூர்




செல்வி த. வீரச்செல்வி
திருவாரூர்




திருமதி ந. வனசெல்வி அரவிந்தன்
தூத்துக்குடி




செல்வி க. சுபத்ரா
தென்காசி



திரு. வீ. அதிவீரபாண்டியன்
தேனி



செல்வி அ. அமுதசுரபி
நாகப்பட்டினம்



திரு. வினோத் சுந்தரராசு
நாமக்கல்



செல்வன் அருள் பெனடிக்ட், அ.
நீலகிரி



திரு. மு. இராஜதுரை
புதுக்கோட்டை



முனைவர் த. மாயக்கிருட்டிணன்
பெரம்பலூர்



திதிரு. ச.வே. மருது பகவதி
மதுரை



திரு. நா. சத்தியப்பிரியன்
மயிலாடுதுறை



திரு. மு. தவசிமுத்து
விருதுநகர்



திரு. இரா. ஆசைத்தம்பி
விழுப்புரம்



திருமதி சி. கலைவாணி
வேலூர்

# தூயதமிழ்ப் பற்றாளர் பரிசு – 2024



முனைவர் கு. சக்திலீலா
விருதுநகர்



திருமதி ச. அமுதா
திருச்சிராப்பள்ளி



திரு. ம. அரிகிருஷ்ணன்
கிருட்டினகிரி



முனைவர் பெ. அசோகன்



முனைவர் பெ. அசோகன்

# கருத்துரையாளர்கள் – 2024



பேரா. ப. அருளி



பேரா. ப. மருதநாயகம்



முனைவர் வெ. முருகன்



முனைவர்
மோசசு மைக்கேல் பாரடே



முனைவர் கு. அரசேந்திரன்



முனைவர் ய. மணிகண்டன்



திரு. தேனி மு. சுப்பிரமணி



முனைவர் தா. பேகம்

# மொழிக்கடன்




முனைவர் இரா.கு.ஆல்துரை

தமிழ்நாட்டரசின் சிறந்த மொழிபெயர்ப்பாளர் விருதுபெற்றவர்


## கடன்பேறு

"ஒரு மொழி பேசுவோர் பிற மொழியிலிருந்து மொழிக் கூறுகளைத் தங்கள் மொழிக்குக் கொள்வது மொழிக் கடன்பேறு ஆகும். ஒவ்வொரு மொழியும் தம் அண்டை மொழிகளிலிருந்து சிலவற்றைக் கற்றுக்கொள்கிறது" (புளூம்பீல்டு 1996:444-445).

"கடன்பேறு என்ற இந்தப் பெயர் குறிப்பிடுவதுபோல் பிற மொழியாளர் மொழிக் கூறுகளைப் போல பின்பற்றுதலாகும். இங்கு இருமொழிக் கூறுகளும் வெவ்வேறா னவையாக இருப்பதில் கடன்பேற்றுத் தன்மை வெளிப்படையாய் அமையும். சில நேரங்களில் கடன் சொற்கள் கடன் கொடுக்கும் மொழியின் தன்மையை எளிதில் காணத்தக்க வகையில் அதன் அயல் பண்பைக் கொண்டிருக்கும். பிற இடங்களில் கடன்சொற்கள் கடன்பெறும் மொழியின் ஒலியன் அல்லது உருபன் தன்மைக்கேற்ப மாற்றி யமைக்கப்படும். என்றாலும் அவற்றின் சொன்மூலத்தைக் கண்டறிவதன் மூலம் அவற்றின் அயல் தன்மையை அறியலாம்" (கிளிசன் 1974:397).

வேறுபட்ட இரண்டு மொழிகளைப் பேசுவோர் கலந்து உறவாடும் சூழல் ஏற்படும் பொழுது ஒரு மொழியிலிருந்து மற்ற மொழி மொழிக் கூறுகளைக் கடனாகப் பெறுவதும் ஒருமொழி மற்ற மொழிக்குக் கடன் கொடுப்பதும் இயல்பு. கடன் பெறுவதும் கொடுப்பதும் உலகமொழிகள் எல்லாவற்றிலும் காணப்படும் ஒரு பொதுப் பண்பாகும். அதிலும் குறிப்பாக, ஒரு மொழிக்கு அருகில் வழங்கும் மொழியிலிருந்து கடன் வாங்குவதும் அம்மொழிக்குக் கடன் கொடுப்பதும் எங்கும் காணக்கிடக்கும் ஒரு தன்மையாகும்.

## காரணியம்

"கடன்பேறு பல காரணியங்களால் நிகழ்கின்றன. ஒரு மொழியில் தேவைக்கருதி கடன்பேறு நிகழ்கின்றது. பெருமைக் கருதி பிறமொழிச் சொற்களைக் கடன் வாங்குவதும் உண்டு. குறிப்பிட்ட கருத்தைக் குறிக்கும் சொல் ஒரு மொழியில் இல்லாமலிருந்து அக்கருத்தைக் குறிக்கும் சொல்லைப் பிறமொழியிலிருந்து கொள்வது தேவைக்கருதி கடன் பெறுவதாகும். பெருமைக் கருதி கடன் வாங்குவதில் ஒரு மொழியைச் செல்வாக்கு நிறைந்த மொழி எனக் கொண்டு அதிலிருந்து செல்வாக்கு குறைந்த மொழி கடன் வாங்குவதாகும்" (ஆக்கெட்டு 1960:405).

சமற்கிருதம் தமிழ் அல்லது திரவிடத்திலிருந்து கடன் கொண்டவை பெரும்பாலும் தேவைக் கருதியே. அது தன்னை வளர்த்துக் கொள்ளவேண்டும் என்னும் தேவைக்கருதி கடன்பெற்றுள்ளது; அதிலும், பெரும்பான்மை தன்னிடம் இல்லாத பொருளையும் கருத்தையும் குறிக்கக் கடன்கொள்ளப் பட்டவை சமற்கிருத மரபிற்கேற்ப மாற்றம் பெற்றுள்ளதால் கடன்கொண்ட சொற்களையும் தன் சொற்களே என்று மயங்கும் நிலை ஏற்பட்டுள்ளது.

தமிழ் சமற்கிருதத்திலிருந்து கடன் கொண்டவற்றுள் பெரும்பான்மையானவை பெருமைக் கருதிக் கடன் பெற்றவையாகும். தமிழில் வழங்கும் சமற்கிருதச் சொற்களுள் மிகப் பெரும்பான்மையானவற்றிற்கு இணையான தமிழ்ச் சொற்கள் இருக்கின்றன. அந்தத் தமிழ்ச் சொற்களுக்கிடையே ஏராளமாகச் சமற்கிருதச்சொற்கள் வழங்கப்பட்டு வருவதை இன்றளவும் காண்கிறோம். இதே வகையில் கடந்த காலத்தில் தமிழ்ச் சொற்களுக்கு இணையான சமற்கிருதச்சொற்கள் வழக்கத்திற்கு வந்து ஏற்கெனவே வழக்கிலிருந்த தமிழ்ச் சொற்கள் பலவற்றை வழக்கு வீழ்த்தியுள்ளன.

## சமற்கிருதத்தில் கலந்துள்ள திரவிடச் சொற்கள்

சமற்கிருதச்சொற்களாகக் கருதப்பட்டு வந்த பல சொற்கள் திரவிடச் சொற்களாகும். கிற்றல் தம் கன்னட- ஆங்கில அகரமுதலியில் சமற்கிருதச் சொற்களாகக் கருதப்பட்டனவற்றுள் பல திரவிடச் சொற்களாக இருப்பதை எடுத்துக்காட்டியுள்ளார். அதைப்போல் மலையாள -ஆங்கில அகரமுதலி தொகுத்த குண்டற்றும் பல திரவிடச் சொற்களை இனங் காட்டியுள்ளார். இது போன்ற பிற அறிஞர்களும் திரவிடச் சொற்களைச் சமற்கிருதச் சொற்களிலிருந்து பிரித்துக் காட்டியுள்ளனர். அவ்வகையில் சமற்கிருதச் சொற்களஞ்சியத்தில் உள்ள திரவிடச்சொற்களை எவ்வாறு இனம் கண்டு கொள்வது என்பதற்குக் கால்டுவெல் ஐந்து நெறிகளைத் தருகிறார். அவையாவன:

"1.) ஒரு சொல் சமற்கிருதத்தில் வேர், ஆக்கம் (derivatives) ஆகியன இல்லாமல் தனிப்பட்டதாக இருந்து திரவிட மொழிகளில் வேருடனும் ஆக்கத்துடனும் பல சொற்கள் கிளைத்தும் காணப்பட்டால் அச்சொல்லைத் திரவிடச்சொல் என்று எடுக்கலாம்.

2.) ஒரு பொருளை அல்லது கருத்தைக் குறிக்க சமற்கிருதத்தில் பல சொற்கள் இருக்க திரவிட மொழிகளில் அப்பொருளை அல்லது கருத்தைக் குறிக்க ஒரு சொல் மட்டும் இருந்தால் அதைத் திரவிடச் சொல் என்று துணியலாம்.

3.) ஒரு சொல் சமற்கிருதம் சார்ந்த இந்தோ–ஐரோப்பிய மொழிகளில் இல்லாமலிருந்து திருந்திய, திருந்தாத் திரவிட மொழிகளில் காணப்பட்டால் அச்சொல்லைத் திரவிடச் சொல் என்று கூறலாம்.

4.) ஒரு சொல்லின் ஆக்கம் சமற்கிருத நூலார் வலிந்து சொல்லியுள்ளதாகவும் அச்சொல்லின் ஆக்கம் திரவிட மொழிகளில் இயல்பாகவும் வினைவடிவத்தினின்று அல்லது வேறு வடிவத்தினின்று பெற்றதாகவும், அதிலிருந்து உருவான சொற்கள் பல திரவிட மொழிகளில் இருப்பின் அதனைத் திரவிடச் சொல் என்று கூறலாம்.

5.) ஒரு சொல் திரவிட மொழிகளில் நேரிதாகவும் நேர்த்தொடர்பு உள்ளதாகவும் இருக்க, சமற்கிருதத்தில் அது உருவகப் பொருளாகவும் நேர்த்தொடர்பு இல்லாததாகவும் இருந்தால் அதைத் திரவிடச் சொல் என்று துணியலாம்" (கால்டுவெல் 1987:566.567).

இக்கருத்துகள் அடிப்படையில் பார்த்தால் ஒரு சொல்லின் திரவிடத் தன்மையை வேர், வேரிலிருந்து ஆக்கம் பெற்று வந்துள்ள சொற்கள், வினைவடிவம், திரவிடக் குடும்ப மொழிகள் கொள்ளும் ஆட்சி ஆகிய தன்மைகளின் அடிப்படையில் கண்டு கொள்ளலாம். அதே நேரத்தில் சமற்கிருதத்தில் உருவகமாகச் சொல்லப்படும் நிலை, வலிந்து கூறும் வேர், இந்தோ–ஐரோப்பிய மொழிகளில் காணப்படும் இனச்சொல் ஆகியவற்றையும் பார்க்க வேண்டும்.

திரவிடமொழி அகரமுதலிகளில் தற்பவமாகக் காட்டப்பட்டுள்ள பல சொற்கள் திரவிட வேர்களிலிருந்து தோன்றியனவாகவும், பின்னர் சமற்கிருதம் தன் அமைப்பிற்கேற்ப மாற்றம் செய்துள்ளதாகவும் இருக்கும். ஆகையால் இத் தன்மையையும் பார்த்துத்தான் அச்சொற்கள் எம்மொழியைச் சார்ந்தன என்று கூறவேண்டும்.

பெரும்பாலும் திருந்தாத் திரவிடமொழிகளில் சமற்கிருத மொழித் தாக்கம் மிகக் குறைவாகும். இப்பொழுது இல்லை என்றாலும் இதற்குமுன் ஒருவகையான தனிமைப்பட்ட நிலையில் திருந்தாத் திரவிட மொழிகள் இருந்துள்ளன. இந்த அடிப்படையில் தான் நீலமலை மொழிகளை இனக்குழு மொழிகள் என்கின்றனர். திருந்தாத் திரவிட மொழிகள் தனிமைப்பட்டு இருந்துள்ளதால் சமற்கிருதத் தாக்கம் ஏற்படவில்லை.

### புலவர்

சமற்கிருதத்தின்மேல் பெரும் மதிப்பு வைத்துள்ள தமிழ், தெலுங்கு மொழிப் புலவர்கள் ஒரு சொல்லைத் திரவிடச் சொல் எனக் குறிப்பாரேயானால் அதை உண்மை எனக் கொள்ளலாம் என்று கால்டுவெல் குறிப்பிடுகிறார். மேலோட்டமாகப் பார்த்தால், இதில் தனிப்பட்டவர் விருப்பு வெறுப்புகளுக்கு இடம் இருப்பதால், இக்கருத்தின் அடிப்படையில் ஆராய்வது அவ்வளவு சரியாக இருக்காது என எண்ணத் தோன்றும். உண்மையில், இதில் ஒரு நடைமுறை உண்மை அடங்கியுள்ளது. தொடர்ந்து மூவாயிரம் ஆண்டுகளாகச் சமற்கிருதம் ஏற்றம் பெற்ற மொழியாகக் கொள்ளப்பட்டு வந்துள்ளது. சமற்கிருதத்தில் உள்ளது எனக் குறிப்பிடுவதே பெருமைமிக்கதாகக் கொள்ளப்பட்டு வந்துள்ள நிலையில் ஒரு குறிப்பிட்ட சொல்லைத் தென்சொல் என்று புலவர் குறிப்பிடுவது எல்லா நிலையையும் அவர்கள் ஆராய்ந்து சமற்கிருதச்சொல் எனக் குறிப்பிட வழியே இல்லை என்னும் நிலையில் அவ்வாறு குறிப்பிட்டுள்ளனர் எனக் கொள்ள வேண்டும்.

இக்கருத்தைப் பற்றிச் சிந்தித்த பாவாணர் "வடமொழியிலுள்ளதெல்லாம் வடசொற்கள் என்று மொழிநூலுணராத சிலர் கொண்டிருக்கின்றனர். மூலமுதன் மொழியாகிய தமிழ் தவிர வேறு எந்த மொழியாவது பிறசொற்கள் இல்லாதில்லை. ஒரு சொல்லை இன்ன மொழி என்று அறிதற்கு அதன் பகுதிப் பொருளையும் அதனின்றும் திரிந்த பல்வேறு சொற்களையும் பார்க்க வேண்டும். அவை எந்த மொழியிலுள்ளனவோ அந்த மொழிக்கே அது உரியதாம். வினைச் சொல்லாயின் புடைபெயர்ச்சி (conjugation) வேண்டும். பெயர்ச்சொல்லாயின் பெயரிலக்கணம் (declension) வேண்டும். கல் என்னும் வினை கற்றான், கற்றாள், கற்றார், கற்றது, கற்றன, கற்ற, கற்க, கற்பித்தான், கற்கப்பட்டது, கற்றிலன், கலை எனப் பல வடிவங்களிலும் புடைபெயர வேண்டும். வடமொழியிலோ அது கலா (கலை) எனத் தொழிலாகு பெயராய் மட்டும் நிற்கும்" (பாவாணர் 1931:378) என்றும்,

"ஒரு சொல்லை ஒரு மொழிக்குரிய தென்று அறிதற்கு அதன் பகுதி (stem) அல்லது மூலம் (root) எம்மொழியிலுள்ளதென்று அறிதல் வேண்டும். ஒரு சொல்லின் பகுதி அல்லது மூலம் பல மொழியிலிருப்பின் எம்மொழியில், பகுதி இயற்கையான தென்றும், பொருள் சிறந்ததென்றும்

அறிதல் வேண்டும். பல மொழியிலும், பகுதி வடிவிலும் பொருளிலும் ஒத்திருப்பின், எம்மொழியில் அதன் திரிசொற்களுள வென்றும் அவையும் பல மொழிகளிலிருப்பின் எதில் அவை கழி பல என்றும் காண்டல் வேண்டும்" (பாவாணர் 1935:254) என்றும் தெளிவுபடக் குறித்துள்ளார்.

### கெய்த்து

"சமற்கிருதம் மண்ணின் பேச்சுமொழிகளுக்கிடையே பயன்படுத்தப் பட்டிருப்பதால் அயன்மூலத்திலிருந்து கடன்பெறுவது, தக்காணம் அல்லது இந்தியாவின் பிறபகுதிகளிலிருந்து இயல்பாக நடைபெற்றுள்ளது. குமாரிலர் சமற்கிருத ஈறுகளைச் சேர்த்துக்கொண்டு திரவிடச் சொற்கூறுகளை இணைத்துக் கொள்வதற்கு இசைவளித்துள்ளார். குறிப்பாகச் சாயண என்பது போன்ற பெயர்கள் தாராளமாகச் சமற்கிருத வயமாக்கப்பட்டுள்ளன. வடநாட்டு ஏடுகளிலுள்ள D, l என்பவைக்கு மாற்றாக ள் என்பதைக் கொண்டு தென்னாட்டு ஏடுகளில் வந்துள்ளது ஐயமில்லாமல் திரவிடத் தாக்கத்தால் ஏற்பட்டதாகும்" (பெரிடேல் கெய்த்து 1928:25).

### சொற்கடன்

ஒரு மொழியிலிருந்து சொற்களைக் கடன் வாங்கி இன்னொரு மொழி பயன்படுத்துவதே சொற்கடன் ஆகும். இது ஒரு மொழியின் சொல்லைத் தன்மொழியில் மொழிபெயர்த்துப் பயன்படுத்துவதிலிருந்து வேறானது; அதாவது ஒரு சொல்லை அல்லது ஒரு தொடரை அதன் பொருள் அல்லது மரபை வேறொரு மொழியில் சொல்லுக்குச் சொல் மொழிபெயர்த்துப் பயன்படுத்துவதிலிருந்து வேறானது; ஒரே வேர் அடிப்படையில் தோன்றிக் குடும்பமொழிகளில் இருக்கும் இனச்சொல்லிலிருந்தும் வேறானது; இனமொழிகளுக்குள்ளும் சொற்கடன் நடைபெறலாம். என்றாலும், அவ்வகைக் கடன் அயன்மொழிக் கடனைப் போன்றதன்று.

மொழிகளின் ஊடாட்டத்தில் பெறும் சொற்கடனைக் கடன் என்று குறிப்பிடுவதில் பொருத்தப்பாடு இல்லை என்கின்றனர். கடன் என்றால் அங்குத் திருப்பிக் கொடுப்பது இருக்கும். ஆனால் மொழிகள் பெறும் சொற்கடனில் திருப்பிக் கொடுப்பது எதுவும் இல்லை. சொற்கடன் எப்பொழுதும் பெறுவதாகவே இருக்கும். இரண்டு மொழிகளுக்கிடையே தொடர்பு ஏற்படும்போது சொற்கடன் நிகழ்கிறது, ஒரு மொழி பெறும் கடன் சொல்லிலும் இரு வகையுண்டு. தன் மொழியில் இல்லாத பொருளுக்கும் கருத்துக்குமான சொற்களைப் பெறுதல் ஒருவகை. மற்றொன்று ஏற்கெனவே தன் மொழியில் இருக்கும் ஒரு சொல்லுக்கு ஒரு பொருள் பல சொல்லாக அமையும் வகையில் கடன் பெறுவது இரண்டாம் வகை. இதில் கவனிக்க வேண்டியது என்னவென்றால் காலவோட்டத்தில் முதல்வகைச் சொற்களுக்கும் தன் மொழியில் உரிய சொற்கள் படைக்க வேண்டும். இதுதான் இயல்பான மொழி வளர்ச்சி. ஆனால் பல இடங்களில் இரண்டாம் வகையினவாகச் சொற்கள் அமையப்பெற்ற பின் சொந்த மொழிச் சொற்களை வழக்கிழக்க விடுவது நடக்கிறது. இந்த இரண்டாம் வகையிலமைந்த ஆயிரக்கணக்கான சொற்கள் தமிழில் வழக்கிழந்துள்ளன.

எ–டு: அகவை (வயது); அகநாழிகை (கர்ப்பக்கிருகம்); அணிகம் (வாகனம்); அறம் (தருமம்); ஆடவன் (புருஷன்); ஆடை (வஸ்திரம்); இசை அல்லது இன்னிசை (சங்கீதம்); இரப்போன் (பிச்சைக்காரன்); இயம் (வாத்தியம்); இயவன் (வாத்தியக்காரன்); இழப்பு (நஷ்டம்); இளவேனில் (வசந்தம்); உறாவரை அல்லது முற்றூட்டு (சர்வமானியம்); ஊட்டகர், ஊட்டுநர் (போஷகர்); ஊட்டுப்புரை (அன்ன சத்திரம்); ஊதியம் (இலாபம்); ஐயம், இரப்பு (பிச்சை); ஐயம் அல்லது அயிர்ப்பு (சந்தேகம்); ஒப்புரவு (உபகாரம்); ஓமாலிகை (வாசனைச் சரக்கு); ஓரை (இராசி, இலக்கினம்); கண்ணெச்சில் (கண்திருஷ்டி); கரிசு (பாவம்); கருவூலம் (பொக்கிசச்சாலை); கழுவாய் பிராயச் சித்தம்); கூலம் (தானியம்); கூற்றுவன் (யமன்); கேள்வி (விசாரணை); கோள், கோண்மீன் (கிரகம்); சலக்கரணை (சௌகரியம்); சார்ச்சி வழக்கு (உபசார வழக்கு); சால்வு (திருப்தி); சாறு (இரசம்) (பாவாணர் 1992:78–81).

### சொற்களஞ்சியம்

தமிழின் சொற்களஞ்சியம் (lexicon) என்பது தமிழ் மொழியிலுள்ள சொற்கள் அல்லது சொற்கூறுகள் அனைத்தையும் குறிக்கும் சொல். அதாவது, தமிழ் தோன்றிய நாள் முதல் இன்றுவரை அம்மொழியில் இடம்பெற்றிருக்கும் சொற்கள் அனைத்தும் தமிழின் சொற்களஞ்சியம் ஆகும். தமிழ் எழுத்துவடிவம் பெறுவதற்கு முன்பு பல காலம் பேச்சுமொழியாக இருந்துள்ளது. எழுத்துவடிவம் பெற்று இலக்கியங்கள் அமையும் போது அவ்விலக்கியங்களில் தமிழ்ச் சொற்கள் ஆயிரக்கணக்கானவை இடம்பெற்றுள்ளன. அவ்வகையில், கிடைத்திருக்கும் இலக்கியங்கள் வழி தமிழ்ச்சொற்கள் பலவற்றை இன்றளவும் அறிந்து வருகிறோம். ஆனால், இலக்கியத்தில் இடம்பெறாத சொற்கள் மிகப்பல பேச்சுவழக்கில் இருந்துள்ளன என்பது வெளிப்படை. அவற்றுள் பல வழக்கிழந்துள்ளன என்பதும் வெளிப்படை. எவ்வாறானாலும் தமிழில் வழக்கில் இருந்துள்ள சொற்கள் முழுமையையும் நாம் இன்றளவில் கொண்டிருக்க வில்லை என்பதே உண்மை. பழங்காலத்தில் மொழிச் சொற்களைப் பதிந்து வைக்கும் அகரமுதலிகள் இருந்திருந்தால் அவற்றில் மொழிச் சொற்கள் அனைத்தும் அல்லது குறைந்தது பெரும்பான்மையான சொற்கள் இடம்பெற்றிருக்கும். உலக அளவில், 18ஆம் நூற்றாண்டில்தான் மொழிச் சொற்கள் அனைத்தையும் அல்லது பெரும்பான்மைச்

சொற்களை உள்ளடக்கிய முழுமையான அகரமுதலிகள் உருவாக்க நடைமுறைகள் நடந்துள்ளன.

பழங்காலத் தமிழ்ப்பேச்சு மொழியில் பெரும் எண்ணிக்கை சொற்களைக் கொண்ட சொற்களஞ்சியம் இருந்துள்ளது. அப்பொழுது இருந்த தமிழ்ச் சொற்கள் அனைத்தும் பழங்காலத் தமிழ் இலக்கியத்தில் இடம்பெறவில்லை என்பது வெளிப்படை. அன்று பேச்சுவழக்கில் இருந்த சொற்களஞ்சியத்தில் ஒரு சிறு பகுதி மட்டும் இலக்கியத்தில் இடம்பெற்றுள்ளது. இக்கருத்தை மொழியியலாளர்கள் வலியுறுத்தி வருகின்றனர். அதாவது ஒரு மொழியின் சொற்கள் அனைத்தும் அம்மொழியில் தோன்றிய இலக்கியத்தில் இடம் பெற்றிருக்கும் என்று சொல்ல இயலாது. பொதுவாக எழுத்து பெற்று இலக்கியமாகப் பதிவுப்பெற்ற மொழிகளில் சொற்களஞ்சியத்தை அப்பதிவினின்று அறிந்து கொள்ளலாம். ஆனால் பழங்கால மாந்தனது மொழியின் சொற்களஞ்சியத்தை அறிவதற்குப் பதிவுகள் கிடைப்பது இல்லை. இருந்தாலும் பதிவுபெற்ற இலக்கியத்தின் சொற்களஞ்சியத்தினின்று அதற்கு முன் வாழ்ந்த மாந்தனது கருத்துகளை ஓரளவிற்கு மீட்டுருவாக்கம் செய்ய இயலும். அவ்வகையில் மிகப்பழங்காலத்து மொழிச் சொற்களை மீட்டுருவாக்கம் செய்ய இயலும்.

புதிய சொற்கள் உருவாவதும் வழக்கில் உள்ள சொற்கள் சில வழக்கிழப்பதும் மொழியின் இயல்பு. அவ்வகையில், தமிழ் மொழியில் உருவாகும் புதிய சொற்களை அதன் சொற்களஞ்சியத்துடன் இணைத்துக் கொள்ளலாம். ஆனால், அம் மொழியில் வழக்கில் இருந்து பின் வழக்கிழந்த சொற்களை அடையாளம் காண்பது அரிது. ஒரு வேளை வழக்கிழந்த சொற்கள் இலக்கியத்தில் இடம்பெற்றிருந்தால் அவற்றைச் சொற்களஞ்சியத்துடன் சேர்த்துக் கொள்ளலாம். பொதுவாக ஒரு மொழியில் உள்ள சொற்கள் அனைத்தும் அம்மொழி இலக்கியத்தில் இடம்பெற்று இருக்கா. மொத்த சொற்களஞ்சியத்தில் மிகக்குறைந்த அளவு சொற்களே அம்மொழி இலக்கியத்தில் இடம்பெற்றிருக்கும். அவ்வாறு இருக்கும்போது இலக்கியங்களில் இடம்பெற்றுள்ள சொற்களை மட்டும் கொண்டு அம்மொழிச் சொற்களஞ்சியத்தின் அளவை மதிப்பிடுவது சரியானதாக இருக்காது. இக்கருத்தடிப்படையில் வைத்துப்பார்த்தால் பழந்தமிழ் இலக்கியத்தில் இடம்பெற்றுள்ள சொற்களஞ்சியம் தமிழின் ஒட்டுமொத்தச் சொற்களஞ்சியத்தில் ஒரு கூறுதான் என்று சொல்ல வேண்டும்.

சமற்கிருதத்தின் நிலை இதற்கு நேர் மாறானது. சமற்கிருதம் என்றும் பேச்சு மொழியாக இருந்தது இல்லை. அது இலக்கியக் கிளைமொழியாகவே (literary dialect) இருந்துள்ளதால் அங்கு ஒருமுறை இடம்பெற்ற சொல் வழக்கு இழக்கும் நிலைக்குச் செல்லாது. ஆகையால் அம்மொழியில் சொற்கள் அனைத்தும் வழக்கிழக்காமல் காக்கப்பட்டுள்ளன. ஒரு பேச்சுமொழியில் உள்ளன போன்று வழக்கிழந்த சொற்கள் இருக்கக் கூடும் எனக்கொண்டு மீட்டுருவாக்க முயற்சியில் ஈடுபடுவது சமற்கிருதத்திற்குத் தேவையற்றதாகும். அவ்வகையில் சமற்கிருதச் சொற்களஞ்சியம் கடன்கொள்ளப்பட்ட சொற்கள், மொழிபெயர்த்து உருவாக்கப்பட்ட சொற்கள் என்று அனைத்தையும் வழக்கிழக்காமல் கொண்டுள்ளது.

## பெயர்ச்சொல்

ஒரு மொழி பிற மொழிகளிலிருந்து கடனாகக் கொள்வதில் பெரும்பான்மை பெயர்ச்சொற்களாகத் தான் இருக்கும். ஆகையால் சமற்கிருதம் தமிழிலிருந்து கடனாகக் கொண்டது பெருமளவு பெயர்ச்சொற்களாகும். அந்நிலையில்தான், பாவாணர் தம் வடமொழி வரலாறு என்னும் நூலில் காட்டிய சொற்களுள் பெரும்பாலானவை பெயர்ச்சொற்களாக இருக்கின்றன. இவற்றுள்ளும் பெரும்பாலானவை தனிச் சொற்களாக இருக்கின்றன. இருந்தாலும் இடைகழி – தேஹலி, சாயுங்காலம்– சாயம், செவியுறு– ச்ரு போன்ற கூட்டுச் சொற்களும் சில இடம்பெற்றுள்ளன.

நூற்றுக்கணக்கான சமற்கிருதச் சொற்களுக்கு மூலம் அல்லது முதனிலை தமிழில் இருக்கின்றன. இவற்றைக் குறிக்காமல் வட சொல்லின் பெயர் வடிவிலிருந்தே வினைச்சொற்களைச் செயற்கையாகத் திரித்திருக்கின்றனர். சமற்கிருதம் இலக்கியக் கிளைமொழியாக இருப்பதால் அதில் பெயரடி வினைகளை விருப்பம் போல் மிக எளிதாகத் திரித்துக் கொள்ளலாம் என்பார் பாவாணர். இக் கருத்தை வைத்துப் பார்த்தால் பெருமளவில் பெயர்ச்சொற்களை வடமொழியின் மூலங்களாகக் காட்டியுள்ளமை பொருத்தம் அற்றது எனக் கொள்ளவேண்டும்.

## மொழிபெயர்ப்பு

தமிழிலிருந்து சமற்கிருதம் கடன் கொண்டவற்றை இரு பிரிவினதாகப் பகுக்கலாம். ஒன்று தமிழ்ச் சொற்களை அப்படியே கடன் கொள்ளல் அல்லது சமற்கிருத ஒலியமைப்பிற்கேற்ப மாற்றிக்கொள்ளல். மற்றொன்று தமிழ்ச்சொற்களை மொழிபெயர்த்து வழங்குவது. இவ்வகைச் சொற்களுக்கு மறைக்காடு– வேதாரண்யம்; பழமலை– விருத்தாச்சலம்; ஆறுமுகன்–ஷண்முகன்; கயற்கண்ணி– மீனாக்ஷி; தடங்கண்ணி– விசாலாக்ஷி; அழகன்– சுந்தரன்; சிவன்– சங்கரன்; தாயுமானதெய்வம்– மாதுரு பூதேஸ்வரர் என்பன போன்று ஆக்கப்பட்டுள்ளதைக் காட்டுவார் பாவாணர். இவ்வாறு மொழிபெயர்ப்பதில் சில அடிப்படைத் தவறுகளும் நடந்துள்ளன.

### குடமுனி

தமிழில் மேற்குத் திசையைக் குடக்கு என்று சொல்வதுண்டு. அவ்வகையில் குடமலை என்றால் மேற்குத் திசையில் அமைந்த மலை என்பது பொருளாகும். மேற்கு மலையாகிய பொதியமலையில் இருந்தவர் என்ற பொருளில் அகத்தியர் குடமுனி என்று தமிழில் அழைக்கப்பட்டுள்ளார். இப்பொருளை உணராமல் குட என்பதனைக் குடம் என்று பிறழ உணர்ந்து, குடத்தில் பிறந்தவர் எனப் பொருள் கொண்டு பின்னர் கலச, கும்ப என்று மொழி பெயர்த்து அகத்தியர் கலசமுனி, கும்பமுனி என்றும் அழைக்கப்பட்டுள்ளார். இதை நிறுவுவதற்கு ஒரு தொன்மக் கதையும் கட்டப்பட்டு உள்ளது என்பதைச் சான்றுக்குக் காட்டலாம். இவ்வாறான தன்மைகள் அனைத்தையும் விளக்கியுள்ளார் பாவாணர்.

### முறை மாற்றம்

சிறுபான்மை மக்கள் மொழி பெரும்பான்மை மக்கள் மொழியிலிருந்து கடன் கொள்ளும். ஆரியர் இந்தியாவிற்குள் நுழையும் பொழுது சிறுபான்மையினராகத் தான் இருந்திருக்கின்றனர். அப்பொழுது இந்தியாவில் திரவிடர்களே பெரும்பான்மை யினராக இருந்திருக்கின்றனர். ஆகையால் சமற்கிருதம் திரவிட மொழியிலிருந்து பலவற்றைக் கடன் கொண்டிருக்கிறது. சமற்கிருதத்திலிருந்து திரவிட மொழிகள் சிலவற்றைக் கடன் கொண்டிருக்கின்றன. ஆனால் திரவிட மொழிகள் சமற்கிருதத்தி லிருந்து மிகுதியானவற்றைக் கடன் கொண்டிருப்பதாகக் கொள்ளப்பட்டு வருகிறது. இது உண்மைக்குப் புறம்பானது என்பதை நிறுவுவதற்குப் பாவாணது வடமொழி வரலாறு நூல் உருவாக்கம் பெற்றுள்ளது. இடைக்காலத்தில் சமற்கிருதம் பெற்றிருந்த ஏற்றத்தால் திரவிடச் சொற்களையும் சமற்கிருதச் சொற்கள் எனக் கருதும் நிலை இருந்தது.

சமற்கிருதத்திலிருந்து தமிழில் கடன் கொள்ளப்பட்டதாகக் கருதப்பட்டு வந்த சொற்களைத் தற்பவம், தற்சமம் என்று இரு வகைப்படுத்தி விளக்குகின்றனர். சமற்கிருதச் சிறப்பு எழுத்தாலும் பொதுவும் சிறப்புமாகிய இருவகை எழுத்தாலும் தமிழில் சிதைந்து வரும் சமற்கிருதச் சொற்களைத் தற்பவம் என்றும் சமற்கிருத மொழிக்கும் தமிழ்மொழிக்கும் பொதுவான எழுத்துக்களைக் கொண்டு அமையும் சொற்களைத் தற்சமம் என்றும் கூறுவர். தமிழில் இருந்து பல சொற்களை சமற்கிருதம் கடனாகப்பெற்று இருக்கிறது என்று வைக்கும்பொழுது இந்தத் தற்பவம், தற்சமம் என்ற பிரிவுகளின் வரையறைகளை மாற்றி அமைக்க வேண்டிய நிலை ஏற்படுகிறது.

அவ்வகையில் தமிழ்ச் சிறப்பெழுத்தாலும் பொதுவும் சிறப்புமாகிய இருவகை எழுத்தாலும் சமற்கிருதத்தில் சிதைந்து வரும் தமிழ்ச் சொற்களைத் தற்பவம் என்று சொல்ல வேண்டும். இதற்கு எடுத்துக்காட்டுகளாக த.உண்ணம் > ச.உஷ்ண; த.கலுழம் > ச.கலிஷ; த.பவளம் > ச.ப்ரவள; த.படி > ச.ப்ரதி; த.சடம் > ச.ஜட; த.குட்டம் > த.குஷ்ட என்பன போன்று வருவனவற்றைக் குறிப்பிடலாம்.

தமிழ் மொழிக்கும் சமற்கிருத மொழிக்கும் பொதுவான எழுத்துகளைக் கொண்டு அமையும் சொற்களைத் தற்சமம் என்று சொல்லவேண்டும். இதற்கு எடுத்துக்காட்டுகளாக த.மீனம் > ச.மீன; த.நீர் > ச.நீர; த.நீலம் > ச.நீல என்பன போன்று வருவனவற்றைக் காட்டலாம்.

### குருதியுறவு

"மொழிகள் மிகப் பல அயன்மொழிச் சொற்கள், மரபுத்தொடர்கள் ஆகியவற்றை கடனாகக் கொள்ளலாம். அயன்மொழி இலக்கண வடிவங்களையும் கையாளலாம். இந்த அடிப்படையில் எல்லா மொழிகளையும் கலவை மொழிகள் என்று குறிப்பிடலாம். ஆனால், இந்தக் கடனாகக்கொண்ட கூறுகள் எப்பொழுதும் அயன்மொழிக் கூறுகளாகவே இருக்கும். அவை ஒரு குடும்பத்தில் எடுத்துக்கொண்ட குழந்தைகளாவே இருக்கும். அவை அதே குடும்பப் பெயர்களைக் கொண்டனவாக இருக்கலாம். ஆனால் அவை அக்குடும்பக் குருதியுறவைக் கொண்டனவாக இருக்கா" (மாக்கசுமுல்லர் 1987:89).

### குறிப்புதவி நூல்கள்


1.) பாவாணர் (ஞா.தேவநேயப் பாவாணர்), 1992, சொல்லாராய்ச்சிக் கட்டுரைகள், கழகம் (முதற்பதிப்பு 1949)

2.) செந்தமிழ்ச் செல்வி, 1931, 1935

3.) Berriedale Keith, 1928, A History of Sanskrit Literature, University of Edinburgh

4.) Bloomfield, Leonard, 1996, Language, Motilal Banarsidas, Delhi (first published 1935).

5.) Caldwell, Robert, 1987, A Comparative Grammar of the Dravidian or South Indian Family of Languages, AES, New Delhi (first published 1913)

6.) Gleason, H.A., 1974, An Introduction to Descriptive Linguistics, Oxford &IBH Publishing Co., New Delhi (first published 1955)

7.) Hocket, C.F., 1960, A Course in Modern Linguistics, The Macmillan Company, NewYork

8.) MaxMuller, 1987, Biographies of Words and the Home of the Aryas, AES, New Delhi (first published 1888)

# இந்தச் சொல்லுக்கு ஏன் இந்தப் பொருள்?
# (வேர்ச்சொல் துணுக்கு விளக்கம்)

**இரா. திருமாவளவன்**
தேசியத் தலைவர்,
மலேசியத் தமிழ்நெறிக் கழகம், மலேசியா



150. இன்னும்> இருத்தல் கூடுதலால் மேலும் என்னும் பொருளாகியது. இன் + உம் = இன்னும். இருக்குந் தன்மை மேலும் மேலும் கூடுகை. உல்> இல்>இன்>இன்னும்.
151. இறைச்சி > உடலோடு உடலாக ஒட்டியிருக்கும் ஊன். உல் = பொருந்தல் , ஒட்டல், சேர்தல் கருத்து வேர். உல்>உறு > இறு > இறுக்கு. உல்>உறு>இறு > இறை> இறைச்சி. உடலில் உட்பொதிவாய் ஒட்டிய ஊன். செய்யுளில் உட்பொதிவாய் இயைந்திருக்கும் உட்கருத்து.
152. ஏறு> ஏ = உயர்வு பொருள் ஒலிக்குறிப்பு. ஏ> ஏல்> ஏறு= மேல் ஏறல்.
153. இறை > தலைமை. ஏ>ஏறு> ஏறை> இறை = உயர்வு, தலைமையான அரசன்.
154. இறைவன்> தலைவன், அரசன். ஏ> ஏல்>ஏறு>ஏறை>இறை> இறைவன். ( ஒரு சொல் இருவேரால் ஆதலும் உண்டு. இல்> இரு> இறு > இறுத்தல் >> இருத்தலால் நிலைத்தல் பொருளாகி நிலைத்து அரசியற்றும் மன்னனைக் குறித்தது. இறைமாட்சி= மன்னனின் மாட்சி.
155. அமல் > நிறைவு . உல்> பொருந்தல் கருத்து வேர். உல்>உம்>அம்>அமல் = மன நிறைவு.
156. அமைவு> மன நிறைவு . உல்= பொருந்தல் கருத்து வேர். உல்>உம்>அம்>அமை> அமைவு. மனம் அமைவாதல்= மனம் நிறைவாதல்.
157. அமர்தல்> பொருந்தி உட்காரல். உல்= பொருந்தல் கருத்து வேர். உல்>உம்>அம்>அமர். ( இருபடைகள் பொருதுவதால் போரும் அமர் எனப்படும். அமர்> சமர் ஆகும். அமரில் போரிட்டு வீரச்சாவடைவார் அமரர் ஆவார். – இக்கால் இறந்தாரை அமரர் என்கிறோம்)
158. அம்மை> அழகு. அம்= அழகு. உல் = பொருந்தல் கருத்து வேர். உல்>உம்> அம் > அம்மை = அனைத்து நிலையிலும் பொருந்திய அழகு. ( அம் + கயல் + கண்ணி= அங்கயற்கண்ணி = அழகிய கயற்கண்ணி)
159. ஆம்பல் > பகலில் இதழ்களைக் குவித்து மொட்டாகும் அல்லி. உல் > பொருந்துதல், சேர்தல் கருத்து வேர். சேர்வதே குவியும் கூம்பும். உல்>உம்>அம்>அம்பு> அம்பல் = குவிந்த மொட்டு. அம்பல்> ஆம்பல்= அல்லி.
160. அமையம் > பொருந்திய நேரம். உல்>உம்>அம்>அமை>அமையம். அமையம்> சமையம்= பொருந்திய நேரம்
161. இறால் > வளைந்த இறால் மீன் >> உல் = வளைவு பொருள் வேர். உல் > இல் > இறு > இறுதல்= வளைதல்; இறு > இற > இறா> இறால்
162. கூனி > வளைந்த உடலைக் கொண்ட இறால் மீன் . உல் = வளைவு பொருள் வேர். உல்> குல் > குன்> குனி > கூனி
163. இறங்கு = வளைந்து தாழ்ந்து கீழ் வருதல். மேலிருந்து கீழே வருதல். இறுதல்= வளைதல். உல் = வளைவு பொருள் வேர். உல்> இல்> இறு > இற > இறங்கு.
164. அவை = மக்கள் நெருங்கிக் கூடுகை. உல் = கூடுதல் பொருள் வேர். உல்> உம்> அம்> அமை > அவை. (அவை > சவை >> சபை )
165. அரங்கம் = அறுத்து வரையறை செய்யப்பெற்ற கட்டடப் பகுதி. உல் = துளைத்தல் கருத்து வேர்.

உல்> உர் > அர் > அரம் > அரம்பு . அரம் > அரங்கு> அரங்கம்

166. உட்கார் > உள் வளைந்து இருக்கையில் ஒடுங்கி அமர்தல். உல்= வளைவு பொருள் வேர். உல்> உள்>உள்கு > உளுக்கு > உளுக்கார் > உட்கார்.

167. அமர் > நிலத்தோடு, இருக்கையோடு பொருந்தி அமர்தல். உல் = பொருந்தல் , சேர்தல் கருத்து வேர். உல்> உம்> அம்> அமர்= அமர்தல்.

168. குந்து > நிலத்தோடு குத்தி வைப்பது போல் கால்களை மடக்கி அமர்தல். உல்= குத்துதல் பொருள் கருத்து வேர். உல்> குல்> குத்து > குந்து

169. ஒல்லி > உடல் வளைதலால் ஒடுங்கிச் சிறுத்தல். உடல் ஒடுங்கி மெலிந்து இருத்தல். உல்= வளைதல் பொருள் கருத்து வேர். உல்> உல்கு, உல் > உல்லி> ஒல்லி

170. குண்டு > உடல் பெருகிப் பருத்திருத்தல். உல் = சேர்தல் பொருள் கருத்து வேர். உல் = சேர்தல் கருத்து வேர். உல் > குல்> குள் > குண்டு . சேர்தலால் பல்கிப் பெருகுதல், விரிதல். குண்டு > குண்டன் = தடியன்

171. அஃறிணை > அல் + திணை = திணை அல்லாதன. ஒழுங்கியல் இல்லாக் கீழ்த்திணை உயிரிகளும் உயிரிலிகளும் .

172. உயர்திணை > உயர்வான ஒழுங்கமைந்த வாழ்வியல் உடைய மாந்தர்.

173. திணை = கட்டமைவான ஒழுக்கம். உல் > திரட்சி, சேர்தல் பொருள் வேர். உல் > துள் > திள்> திரு > திரள். திள் > திண் > திணிவு. திள் > திடம். திள் > திண் > திணை

174. எஃகு > உருக்கிச் செய்யப்படும் மாழை. உல் = இளைமை, மென்மை பொருள் வேர். உல் > இல்> எள் > எள்கு = உருகுதல் . எள்கு > எஃகு .

175. எள் > மிகவும் சிறியது. சிறிதான சமையல் கூலவகை. உல் > இளமை, மென்மை பொருள் வேர். உல் > இல் > எள் = சிறிய கூலம்.

176. எள்ளல் = எள்ளி , இழித்தல் நகையாடல். உல் = இளமை , சிறுமை பொருள் வேர். உல்> இல் > எல்> எள் > எள்ளல்

177. எளிமை = மெல்லிதான இலகுவானத் தன்மை. உல் = இளமை, மென்மை பொருள் வேர். உல் > இல்> எல்> எள்> எளிமை.

178. ஏழை = செல்வத்தால் குறைந்தவர், இளைத்தவர், வறியவர். உல்= இளைமைப் பொருள் வேர். இளமை = இளைத்தது, குறைந்தது. உல் > இல்> எல்> ஏல்> ஏழ்> ஏழை

179. ஏசு = இகழ்தல் , திட்டுதல் . உல்> சிறுமைப் பொருள் வேர். உல் > இல்> எள்> ஏள்> ஏசு

180. இணர் > பூங்கொத்து. உல் = சேர்தல், பொருந்துதல் கருத்து வேர். உல்> இல்> இள்> இண்> இணர் = இணைந்து சேர்ந்திருக்கும் , பூங்கொத்து.

181. குழல் > உல் = துளைத்தல் பொருள் வேர். உல்> குல் > குள் > குழல் = உட்டுளை உடையது. துளைத்தலால் துளை ஏற்படும். அவ்வாறான உள் துளையுள்ள தூம்பினைக் குழல் என்பர். குழல் > குடல் எனவும் ஆகும்.

182. கணவன் > உல் = சேர்தல் , கூடல் கருத்து வேர் . உல் > குல்> கல் > கண் > கண் + அவன் = கணவன் . தன்னைச் சேர்ந்தவன், கூடுதற்குரியவன்.

183. கண்ணாளன் > உல் > குல் > கள் > கண் = கூடல் பொருள் வேர். கண் ஆளன் = கண்ணாளன். தன்னைக் கூடுதற்குரிய தலைவன்.

184. கண்ணராவி = இழிவானது. கண் அராவி = கண்ணை அராவும் காட்சி. அராவுதல் = உறுத்துதல் . கண்ணுக்குத் துன்பத்தைத் தருவது.

185. கண்ணாடி = கண்ணுக்கு அணியும் ஆடி .

186. காணாடி = காண் + ஆடி = உருவைக் காண்பதற்குரிய ஆடி. Mirror.

# தினை!

முனைவர் ஆ. அரிமாப் பாமகன்
மேனாள் ஆங்கில விரிவுரையாளர்
புதுச்சேரி



-------------

இத்துனுண்டு
முத்தத்தில இசுட்டம்
இருக்கா? – இல்ல
இங்கிலிசு முத்தத்தில
கசுட்டம் இருக்கா?

இன்ச் இன்ச்
முத்தம் வைக்க இசுட்டம்
இருக்கா? – இல்ல
பிரெஞ்சு முத்தம் வைப்பதிலே
கசுட்டம் இருக்கா?
(பா. விசய், தூள்).

*****

இ – இல் = இன்மை.
இல் – இன் – இன்று.

"மாசு இல் கற்பின் மடவோள் குழவி
பேஎய் வாங்கக் கைவிட்டாங்கு,
சேணும் எம்மொடு வந்த
நாணும் விட்டேம்; அலர்க, இவ் ஊரே!"
(நற்றிணை 15: 7–10).

பொருள்:மாசில்லாத கற்பினை உடைய ஒருத்தியின் குழந்தையைப் பேய்மகள் ஒருத்தி பிய்த்துத் தின்னுவதற்காகப் பிடுங்கிக்கொள்ளக் கைவிட்டது போல, தொலைவிடத்துக்குச் சென்றாலும் விடாமல் எம்முடனேயே வந்த நாணத்தை, – நீ வாங்கிக்கொண்ட நாணத்தையும் – கைவிட்டுவிட்டோம். ஊர்வாய் எல்லாம் அலர் தூற்றுகிறது.

இ – இக்குணி – இத்தினியூண்டு (இத் துணை) – நக்கினியூண்டு (நை – நச்சு = சிறிய) – இம்மி = மிகச் சிறிய (1/1075200).

"இம்மி என்பது மிகச் சிறிதான மத்தங்காய்ப் புல்லரிசி. அது எள், தினை என்பனபோல் சிற்றளவைப் பொருளாயிற்று.
சிறுமையையுணர்த்தும் இல் என்னுஞ் சொல்லினின்று, இம்மி யென்னும் பெயர் தோன்றியிருக்கலாம்."

"இம்மி அரிசித் துணையானும் வைகலும்
நும்மில் இயைவ கொடுத்துண்மின் – நும்மைக்
கொடாஅதவர் என்பர் குண்டுநீர் வையத்து
அடாஅ அடுப்பி னவர்."
(நாலடியார் 94).

உரை: ஆழமான நீராகிய கடலால் சூழப்பட்ட உலகில் சமைக்க அரிசி இல்லாத அடுப்பினை உடையவர்களும் வாழ்கின்றனர்.
அவர்கள் உம்மைக் 'கொடாதவர்' எனப் பட்டம் சூட்டிப் பழிக்காமல் இருக்க வேண்டும்.எனவே இம்மி அளவு அரிசியாயினும் உம்மால் முடிந்த அளவு நாள்தோறும் அவர்கள் சமைத்துண்ணக் கொடுத்து உதவுங்கள்.

இல் – சில் – சிறு – சிறிய,
"கிராதர் மங்கையும் பராபரன் மதலையும் கெழுமி
விராவு சில்லுணா மிசைந்தனர் மிசிந்திடு தன்மை
முராரி யாதியாந் தேவர்பால் முனிவர்பால் மற்றைச்
சராச ரங்கள்பால் எங்கணுஞ் சார்ந்துள தன்றே."
(கந்தபுராணம், வள்ளியம்மை திருமணப் படலம் 209).
* சில் உணா = சிறிய, அற்பமான உணவு.

"வனப்பு இயல்தானே வகுக்கும் காலை
சில் மென் மொழியான் தாய பனுவலின்

அம்மைதானே அடி நிமிர்வு இன்றே."
(தொல்காப்பியம், செய்யுளியல் 227).

"வாயி லாளரை மயக்குதுயி லுறுத்துக்
கோயிற் சிலம்பு கொண்ட கள்வன்
கல்லென் பேரூர்க் காவலர்க் கரந்தென்
சில்லைச் சிறுகுடி லகத்திருந் தோனென"
(சிலப்பதிகாரம், கொலைக்களக் காதை: 144–147).
* சில்லைச் சிறு குடில் = சின்னஞ் சிறு குடில்.
சில்லை = எளிய, இழிந்த என்றும் பொருள் தரும்.

"இல் – இள் – இடு
இடுப்பு, இடை = சிறுத்த அரை.
இட்டிது = சிறியது.
இட்டிகை = இடுக்கமான வழி.
இண்டு = சிறுய துவாரம்.
இடுகு = இறுகு"
(பாவாணர், வேர்ச்சொல் சுவடி).
"ஆகாறு அளவு இட்டிது ஆயினும் கேடில்லை"
(குறள்).

சில் – சின் – சினை.
சினை = சிறிய உறுப்பு, சிறிய பாகம்,
"இலையே தளிரே முறியே தோடே
சினையே குழையே பூவே அரும்பே
நனை உள்ளுறுத்த அனையவை எல்லாம்
மரனொடு வரூஉம் கிளவி என்ப"
(தொல்காப்பியம், மரபியல் 87).

"அமிழ்துபொதி செந்நா அஞ்ச வந்த
வார்ந்திலங்கு வையெயிற்றுச் சின்மொழி
அரிவையைப்
பெறுகதில் அம்ம யானே பெற்றாங்
கறிகதில் அம்மவிவ் வூரே மறுகில்
நல்லோள் கணவன் இவனெனப்
பல்லோர் கூறயாம் நாணுகஞ் சிறிதே."
(தொல்கபிலர், குறுந்தொகை 14).
உரை: அமுதத்தின் இனிமை நிரம்பிய செவ்விய நாவானது அஞ்சும்படி முளைத்த நேராகி விளங்குகின்ற கூர்மையாகிய பற்களையும் சிலவாகிய சொற்களையும் உடைய தலைவியை நான் மடன்மா ஏறுதலாற் பெறுவேனாக; பெற்றபின்பு இந்த ஊரில் உள்ளார் அறிவாராக; பலர் வீதியில் இந்த நல்லாளுடைய தலைவன் இவன் என்று சொல்லா நிற்க நாம் சிறிது நாணுவேம்!

சின் – சின்ன – சன்ன – சன்னமான (ஊசி).
"மாசித் திங்கண் மாசின சின்னத் துணிமுள்ளின்
ஊசித் துன்ன மூசிய வாடை யுடையாகப்
பேசிப் பாவாய் பிச்சையெ னக்கை யகலேந்திக்
கூசிக் கூசி நிற்பார் கொடுத்துண் டறியாதார்."
(சீவகசிந்தாமணி 2929).
* மாசின சின்னத்துணி =
அழுக்கினையுடையவாகிய சிறிய துணிகளை.

சின்னி – சீனி, சீனி மிளகாய் = ஊசி மிளகாய்.

(சிறுகுறிஞ்சா, சின்னி பாகல், செருப்படை – இம் மூன்றும் நாய்க்கடி மருந்தெனக் கூறப்படும்.
சிறுகுறிஞ்சா – Gymnema sylvestre, சக்கரை கொல்லி.
சிறுசின்னி – Acalypha fruticosa.
செருப்படை – Glinus latoides.
* இதைச் செருப்படி எனத் தவறாக அழைத்து 'நாய்க்கடிக்கும் செருப்படிக்கும் சரியாப் போச்சு' எனச் சொலவடையைச் சொல்லி நாட்டுப்புறங்களில் நாய் கடித்த இடத்தில் ஓர் உருவா நாணயத்தை வைத்துச் செருப்பால் அடிப்பதும் உண்டு.)

ச >< த

பெரியது – பெரிது – பெருசு.
புதியது – புதிது – புதுசு – புச்சு.
மனம் – மனது – மனசு
வைத்தான் – வச்சான்.

சின் – (தின்) = சிறிய.
சின் – சினை > தின் – தினை.
தினை= சிறு கூல வகை (millet).

"நின் நெஞ்சம் களமாக்கொண்டு யாம் ஆள,
எமக்கு எவன் எளிதாகும்?
புனத்துளான் என்னைக்குப் புகா உய்த்துக்
கொடுப்பதோ?
இனத்துளான் எந்தைக்குக் கலத்தொடு
செல்வதோ?
தினைக் காலுள் யாய் விட்ட கன்று
மேய்க்கிற்பதோ?"
(கலித்தொகை 108: 30–33).
பொருள் : உன் நெஞ்சுக் களத்தை ஆள
என்னால் எப்படி முடியும்? புனத்தில் இருக்கும்
என் தந்தைக்குச் சோறு கொண்டு செல்வாயா?
ஆ இனத்தோடு இருக்கும் என் தந்தைக்குப் பால்
கறக்க ஏனம் கொண்டு செல்வாயா? தினை வயல்
பகுதியில் என் தாய் விட்டிருக்கும் கன்றுகளை
மேய்ப்பாயா?
* புகா > புவா = சோறு, உணவு.

தினை = மிக மிகச் சிறிய அளவு என்று
தினையை ஒப்புமை கூறும் நான்கு
குறட்பாக்கள்:
"தினைத் துணை நன்றி செயினும் பனைத்
துணையாக்
கொள்வர் பயன் தெரிவார்." (104).

"எனைத் துணையர் ஆயினும் என்னாம் தினைத்
துணையும்
தேரான் பிறன் இல் புகல்" (144).
* திருவள்ளுவர் போட்ட 144 தடையுத்தரவு:
பிழை புரிகிறோம் என்பதைத் தினையளவுகூடச்
சிந்தித்துப் பாராமல், பிறன் மனைவியிடம்
விருப்பம் கொள்வது, எத்துணைப்
பெருமையுடையவரையும் மதிப்பிழக்கச்
செய்துவிடும்.

"தினைத் துணையாம் குற்றம் வரினும் பனைத்
துணையாக்
கொள்வர் பழி நாணுவார்" (433).

"தினைத் துணையும் ஊடாமை வேண்டும்
பனைத் துணையும்
காமம் நிறைய வரின்." (1282).

"தினை குறு மகளிர் இசை படு வள்ளையும்"
(மலைபடுகடாம்: 342).

"கொடிச்சி காக்கும் அடுக்கல் பைம் தினை முந்து
விளை பெரும் குரல் கொண்ட மந்தி"
(நற்றிணை 22: 1–2).

"பைந்தினை உணங்கல் செம்பூழ் கவரும்
வன்புல நாடன் தரீஇய வலன்ஏர்பு
அம்கண் இருவிசும்பு அதிர ஏறொடு
பெயல்தொடங் கின்றே வானம்
காண்குவம் வம்மோ பூங்க ணோயே."
(ஐங்குறுநூறு 469).
உரை: அவன் வன்புல நாடன்.
காயவைத்துக்கொண்டிருக்கும் தினையைச்
செம்பூழ் என்னும் செம்போத்துப் பறவை கவரும்
வன்புல நாடன். சென்ற அவனைத் திரும்ப
அழைத்து வருவதற்காக வானம் இடி
முழக்கத்துடன் மழை பொழிவதைப் பார். அவரை
அழைத்துவரும் மழையை நாம் சென்று
காணலாம் வா எனத் தோழி தலைவியை
அழைக்கிறாள்.

"அந்த வளவைதனில் ஆறிரண்டு மொய்ம்புடைய

எந்தை யருளுய்ப்ப எயினர்குலக் கொற்றவனும்
பைந்தொடி நல்லாளும் பரிசனங்கள் பாங்கெய்தச்
செந்தினையின் பைங்கூழ் செறிபுனத்துப்
புக்கனரே."
(கந்தபுராணம், வள்ளியம்மை திருமணப் படலம்
33).

"தினைப்புன மேவும் குறக்கொடி யோடும்
திருத்தணி மேவும் பெருமாளே!"
(திருப்புகழ் 249: 8).

"பாலும் பழமும்,
தேனும் தினையும்
நாலும் தருவேன்,
மேலும் தருவேன்
என்ன வேண்டும்
இன்னும் சொல்லலாமா?
– விழியே விழியே... "
(கண்ணதாசன், புதிய பூமி).
* தேனும் தினைமாவும் தமிழர் உணவன்றோ!

"ஓராந்தான் திங்களுக்கு
ஓரிலையான் தினை பயிறு
ஈராந்தான் திங்களுக்கு
ஈரிலையான் தினைபயிறு..."
* தமிழ் எண்வரிசை கற்பிக்கும் நாட்டுப்புறப்
பாடல்.

தெம்மாங்குப் பாடலிலிருந்து:
காடுவெட்டிக் கல்பொறுக்கிக்
கம்புசோளம் தினைவிதைத்துக்
காலைமாலை காட்டைக் காக்கத் தங்கரத்தினமே!
கண்விழித்திருந்தாளாம் பொன்னுரத்தினமே! ...

தெய்வானையைக் காவல்வைத்தால்
தீஞ்சிடுமே தினைப்பயிரு!
வள்ளியைக் காவல்வைத்தால் தங்கரத்தினமே!
வனத்துக்கொரு சேதமில்லை
பொன்னுரத்தினமே!.....

'தினை விதைத்தவன் தினை அறுப்பான்; வினை விதைத்தவன் வினை அறுப்பான்.' – பழமொழி.

தினைக்குருவி – தினையன் குருவி (munia black) – மிகச் சிறிய குருவி.
* செங்காந்தள் மலருக்கும் தினையன் குருவிக்கும் தமிழர்கள் நெஞ்சத்தில் ஒரு நிலையான இடம் இருப்பது நாம் அறிந்ததே. தமிழீழத்தில் தினைக்குருவியைத் தினையன் குருவி என்பர். தினையன் குருவியின் (munia) படம் கீழே உள்ளது.

மிக மிகச் சிறிய = தினை – tiny! மூலம் தெரியவில்லை எனப்படும் சொல்!
tiny (adj.)
1590s, from tyne "very small" (c. 1400, perhaps from tine) + –y (2).

tine (n.)
mid–14c., from Old English tind "spike, beak, prong, tooth of a fork," a general Germanic word (compare Old High German zint "sharp point, spike," Old Norse tindr "tine, point, top, summit," German Zinne "pinnacle"), of unknown origin.



# பால்கெழு கிளவி: இலக்கணப் பக்கச் சொல்

பேரா. முனைவர் ப. கொழந்தசாமி,
அரசினர் ஆய்வு நிறுவனம், புதுச்சேரி.

செம்மொழியான தமிழின் தொன்மையான விளக்கவியல் இலக்கணமான தொல்காப்பியம் ஒவ்வொரு நூற்பாவிலும் தமிழ்ப் பொருண்மைக் கோட்பாட்டை வகுத்துரைக்கின்றது. அதன்படி பொருளதிகாரத்தின் ஐந்தாம் இயலான பொருளியல் இலக்கியப் பொருண்மையை , அதாவது பாடலின் நுண்பொருளை அறியும் நுட்பத்தை இலக்கணவியல் / இலக்கியவியல் பாங்கில் எடுத்துரைக்கின்றது. இவ் இயலின் ஐந்தாம் நூற்பா,

"பால்கெழு கிளவி நால்வர்க்கும் உரித்தே"

என்று கதைமாந்தர் கூற்று மரபினை எடுத்துரைக்கின்றது. அதாவது தோழி, செவிலி, நற்றாய், தலைவி ஆகிய பெண்பாலார், தன்னோடும் பிற உயிரினங்களோடும் அன்பு மிகுந்த சொற்களைப் பேசுவதாகப் பாடல் அமைந்தால் மயங்காமல் அதை ஏற்று, அதன் உளவியல் நோக்கத்தைப் புரிந்துகொள்ளவேண்டும். இந்தப் பால்கெழு கிளவியை இலக்கணத்திற் பக்கச்சொல் என்று நூற்பா உரையில் நச்சர் சுட்டுகின்றார். அதாவது பிற உயிரினங்களைப் பெண்பாலாகப் பாவித்துப் பாடுவதாகும். அகநானூற்றின் 165ஆம் பாடலில் நற்றாய் மணற்பாவையைப் பெண்ணாகக் கருதிப் பேசுவதை இவண் சான்றாகக் கொள்ளலாம். அதனால் இத்தகைய சூழலில் அமைகின்ற உளவியற் பொருண்மையைத் தெளிதல் சிறந்ததாகும்.

நன்றி: இணையத் தரவுகள்.

# விண்வெளி அறிவியல்துறை வல்லுநர்குழுக் கூட்டம்



தமிழ்நாடு அரசு, செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தின் சார்பில், செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தின் சார்பில், துறை வாரியாக வல்லுநர் குழுக்கூட்டங்கள் நடத்தி, துறைசார் வல்லுநர்களின் உதவியுடன் கலைச்சொற்களைத் தொகுத்து, சீராக்கம் செய்து, தமிழறிஞர்கள், கல்வியாளர்கள், ஊடகத்தார், ஆய்வாளர்கள், தமிழார்வலர்கள் உள்ளிட்டோர் பயன்பெறும் வகையில் சொற்குவை (sorkuvai.tn.gov.in) வலைத்தளத்தில் பதிவேற்றம் செய்யப்படுகின்றன. மேலும் இக்கலைச்சொற்கள் ஆட்சிச் சொல்லகராதி, துறைவாரியான ஆட்சிச் சொல்லகராதி குறுநூல் ஆகியவற்றில் சேர்க்கப்பட்டு, அச்சிட்டு, சட்டமன்றக் கூட்டத்தொடரின்போது மாண்புமிகு அமைச்சர் பெருமக்களுக்கும், அந்தந்தத் துறையினருக்கும் வழங்கப்படுகின்றன.

அந்தவகையில், 18.03.2025ஆம் நாள், செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தின் சார்பில் விண்வெளி அறிவியல்துறை வல்லுநர் குழுக் கூட்டம், சென்னை – கோட்டூர்புரத்தில் உள்ள பிர்லா கோளரங்க வளாகத்தில் நடைபெற்றது. "கலைச்சொல்லாக்கம்" எனும் பொருண்மையில் நடைபெற்ற இக்கூட்டத்தில் விண்வெளி அறிவியலாளர் திரு.நெல்லை சு. முத்து அவர்கள் வாழ்த்துரை வழங்கிச் சிறப்பிக்க, அகரமுதலி இயக்கக இயக்குநர் (மு.கூ.பொ.) திருமதி க. பவானி அவர்கள் முன்னிலையுரையாற்றினார்.

கூட்டத்தில், முனைவர் ஆ. அரிமாப்பாமகன், முனைவர் சா. இராமு, முனைவர் மு. கண்ணன், திருமதி மா. சங்கீதா, முனைவர் ல. சாய்ரமேஷ், திரு. நா.சு. சிதம்பரம், திரு. ஜெ. தயாநிதி, முனைவர் இரா. பன்னிருகைவடிவேலன், புலவர் வெற்றியழகனார், முனைவர் தா. பேகம், திரு. த.வி. வெங்கடேஸ்வரன், முனைவர் சி. ஜோசப் பிரபாகர் ஆகிய துறைசார் வல்லுநர்கள் மற்றும் தமிழறிஞர்கள் கலந்துகொண்டு விண்வெளி அறிவியல்துறை சார்ந்த 412 ஆங்கிலச் சொற்களுக்கு நிகரான தமிழ்க் கலைச்சொற்களை வழங்கி, அவற்றைச் சீராக்கம் செய்யும் வகையில் கருத்துரைகளை வழங்கினார்கள்.

இக்கூட்டத்தில் வழங்கப்பட்ட தமிழ்க் கலைச்சொற்களுள் சில :

| | |
|---|---|
| Aerodynamic Force | காற்றியக்க விசை |
| Aerodynamic Moment | காற்றியக்கத் திருப்பு திறன் |
| Ballistic Test | வீச்சாய்வு / எறிதலாய்வு |
| Balloon Flight | வளிக்கூண்டுப் பறக்கை |
| Band Pass Limiter | அலைக்கற்றைக் கடப்பு வரம்பி |
| Band Reject Filter | அலைக்கற்றை ஒதுக்கு வடிப்பான் |
| Band Spreading | அலைக்கற்றைப் பரவல் |
| Capacitive Coupling | மின்தேக்கு திறன் இணைப்பு |
| Day Glow | பகல் ஒளிர்வு |
| De Orbited | வட்டணை நீக்கம் / சுற்றுப்பாதை நீக்கம் |
| De Orbiting | சுற்றல் நீக்கம் / சுற்றுகை நீக்கம் |
| Dead Loading | சுமையேற்றா எடை |
| Dead Reckoning | சற்றொப்பக் கணக்கிடல் |
| Decelerometer | எதிர்முடுக்க அளவி |

கூட்டத்தில் இயக்ககத் தொகுப்பாளர் முனைவர் வே. கார்த்தி நிகழ்ச்சியைத் தொகுத்து வழங்கி வரவேற்புரை வழங்க, கூட்டத்தின் முடிவில் தொகுப்பாளர் ஜெ. சாந்தி நன்றி கூறினார்.

# உணவுத் தொழில்நுட்பத்துறை வல்லுநர் குழுக்கூட்டம்




செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தின் சார்பில் 18.03.2025ஆம் நாள் உணவுத் தொழில்நுட்பத்துறை வல்லுநர் குழுக் கூட்டம், சென்னை – அண்ணா பல்கலைக்கழகம், கிண்டி பொறியியல் கல்லூரி, கணிப்பொறி அறிவியல் (ம) பொறியியல்துறைக் கருத்தரங்க அறையில் நடைபெற்றது.

"கலைச்சொல்லாக்கம்" எனும் பொருண்மையில் நடைபெற்ற இக்கூட்டத்தில் அண்ணா பல்கலைக்கழகப் பொறியியல் தொழில்நுட்பத் தமிழ் வளர்ச்சி மைய இயக்குநர் முனைவர் பா. உமா மகேஸ்வரி அவர்கள் தலைமையேற்று வாழ்த்துரை வழங்கிச் சிறப்பிக்க, அகரமுதலி இயக்கக இயக்குநர் (மு.கூ.பொ.) திருமதி க. பவானி அவர்கள் முன்னிலையுரையாற்றினார்.

கூட்டத்தில், முனைவர் க. நந்தினி தேவி, முனைவர் இரா. சுதாராணி, முனைவர் ஜெ. ஜெயமுத்துநகை, முனைவர் கே. இராமலெட்சுமி, முனைவர் ர. ஆனந்த், முனைவர் கோ. பாபு, முனைவர் கு.ஸ்ரீ சௌமியா, முனைவர் கோ. நாகமணியம்மை, முனைவர் கா. மணிகண்டன்,முனைவர் ஆ. அரிமாப்பாமகன், முனைவர் மு. கண்ணன், திரு. நா.சு. சிதம்பரம், முனைவர் இரா. பன்னிருகைவடிவேலன், முனைவர் தா. பேகம், ஆகிய துறைசார் வல்லுநர்கள் மற்றும் தமிழறிஞர்கள் கலந்துகொண்டு உணவுத் தொழில்நுட்பத்துறை சார்ந்த 374 ஆங்கிலச் சொற்களுக்கு நிகரான தமிழ்க் கலைச்சொற்களை வழங்கி, அவற்றைச் சீராக்கம் செய்யும் வகையில் கருத்துரைகளை வழங்கினார்கள்.

கூட்டத்தில், முனைவர் க. நந்தினி தேவி, முனைவர் இரா. சுதாராணி, முனைவர் ஜெ. ஜெயமுத்துநகை, முனைவர் கே. இராமலெட்சுமி, முனைவர் ர. ஆனந்த், முனைவர் கோ. பாபு, முனைவர் கு.ஸ்ரீ சௌமியா, முனைவர் கோ. நாகமணியம்மை, முனைவர் கா. மணிகண்டன்,முனைவர் ஆ. அரிமாப்பாமகன், முனைவர் மு. கண்ணன், திரு. நா.சு. சிதம்பரம், முனைவர் இரா. பன்னிருகைவடிவேலன், முனைவர் தா. பேகம், ஆகிய துறைசார் வல்லுநர்கள் மற்றும் தமிழறிஞர்கள் கலந்துகொண்டு உணவுத் தொழில்நுட்பத்துறை சார்ந்த 374 ஆங்கிலச் சொற்களுக்கு நிகரான தமிழ்க் கலைச்சொற்களை வழங்கி, அவற்றைச் சீராக்கம் செய்யும் வகையில் கருத்துரைகளை வழங்கினார்கள்.

இக்கூட்டத்தில் வழங்கப்பட்ட தமிழ்க் கலைச்சொற்களுள் சில :

| | |
|---|---|
| High–Pressure Processing | உயர் அழுத்தச் செயல்முறை |
| Ultrasound Processing | மீயொலிச் செயல்முறை |
| Freeze Drying | உறைவால் உலர்த்தல் |
| Shelf–Life Testing | பயன்கால ஆய்வு |
| Foodborne Pathogens | உணவுவழிப் பரவும் நோயீனிகள் |
| Vacuum Packing | வெற்றிடமாக்கிப் பொதித்தல் |
| Artificial Sweetener | செயற்கை இனிப்பூட்டி |
| Thickening Agent | கெட்டியாக்கி |
| Flavor Enhancer | சுவைமணம் பெருக்கி |
| preservative free | பதப்படுத்தியில்லா |
| Inert gas packaging | செயலற்ற வளிமப் பொதித்தல் |
| Fumigation | வேதிப் புகையூட்டல் |
| Cold pasteurization | வெப்பமில்லாப் பதனீட்டல் |
| Freezing point depression | உறைநிலைத் தாழ்வு |
| Thermal Processing | வெப்பச் செயல்முறை / தெறுமச் செயல்முறை |
| Emulsifier | பால்மமாக்கி |
| Bio Food / Organic Food | இயற்கை வேளாண் உணவு |
| Bio Green Agriculture | இயற்கை வேளாண்மை |
| Biofertilizer | உயிரியுரம் |

கூட்டத்தில் இயக்ககத் தொகுப்பாளர் முனைவர் வே. கார்த்தி நிகழ்ச்சியைத் தொகுத்து வழங்கி வரவேற்புரை வழங்க, கூட்டத்தின் முடிவில் தொகுப்பாளர் ஜெ. சாந்தி நன்றி கூறினார்.

# திரைப்படத் துறை வல்லுநர் குழுக் கூட்டம்




செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தின் சார்பில் 24.03.2025ஆம் நாள் திரைப்படத்துறை வல்லுநர் குழுக் கூட்டம், சென்னை – தமிழ்நாடு அரசு எம்.ஜி.ஆர். திரைப்படம் (ம) தொலைக்காட்சிப் பயிற்சி நிறுவன வளாகத்தில் நடைபெற்றது.

"கலைச்சொல்லாக்கம்" எனும் பொருண்மையில் நடைபெற்ற இக்கூட்டத்தில் அகரமுதலி இயக்கக இயக்குநர் (மு.கூ.பொ.) திருமதி க. பவானி அவர்கள் முன்னிலையேற்று நோக்கவுரையாற்றினார்.

கூட்டத்தில், திரு. ப. அன்பரசு, திரு. அ. சசிகுமார், திரு. செ. திருமலைவேந்தன், திரு. ஜெ. சுரேஷ், திரு. இ. சுபமோகன், திருமதி தெ. கௌரி மனோகரி, திரு. க. சரவணன், திரு. அ. ஹேண்ட்ரிக் ஸ்டாலின், திரு. சு. சுகந்தன், திரு. இ. அஸ்வின் குமார், திரு. கு.மோ. தாமோதரன், திரு. முரளிதரன், முனைவர் ஆ. அரிமாப்பாமகன், முனைவர் மு. கண்ணன், திரு. நா.சு. சிதம்பரம், முனைவர் சா. இராமு ஆகிய துறைசார் வல்லுநர்கள் மற்றும் தமிழறிஞர்கள் கலந்துகொண்டு உணவுத் தொழில்நுட்பத்துறை சார்ந்த 352 ஆங்கிலச் சொற்களுக்கு நிகரான தமிழ்க் கலைச்சொற்களை வழங்கி, அவற்றைச் சீராக்கம் செய்யும் வகையில் கருத்துரைகளை வழங்கினார்கள்.




இக்கூட்டத்தில் வழங்கப்பட்ட தமிழ்க் கலைச்சொற்களுள் சில :

Fish eye camera – விரி படப்பதிவி

Aerial camera – உயர்நிலைப் படப்பதிவி

Under water camera – நீர்மூழ்கிப் படப்பதிவி

Caravan – ஏந்தூர்தி

Micro lense – நுண்வில்லை

Frame by Frame – உருநிரல்

Framing – உருப்படுத்தல்

Black comedy – இடர்நகை / கருங்கூத்து

Clap board – குறிப்படி பலகை

Sink sound – ஒத்திசையொலி

Look up Table – காட்சிநிறப் பட்டியல்

கூட்டத்தில் இயக்ககத் தொகுப்பாளர் முனைவர் வே. கார்த்தி நிகழ்ச்சியைத் தொகுத்து வழங்கி வரவேற்புரை வழங்க, கூட்டத்தின் முடிவில் தொகுப்பாளர் ஜெ. சாந்தி நன்றி கூறினார்.

# சொற்குவை மாணவத் தூதுவர் / இளம் அகராதியியலாளர் பயிற்சி



தமிழ்நாடு அரசு, தமிழ்வளர்ச்சித்துறை, செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம் சார்பில் 18.03.2025, 19.03.2025 ஆகிய இருநாள்கள், செங்கல்பட்டு – இராசேசுவரி வேதாசலம் அரசினர் கலைக்கல்லூரியின் அண்ணா அரங்கத்தில் "சொற்குவை மாணவத் தூதுவர் / இளம் அகராதியியலாளர் பயிற்சி" நடைபெற்றது.

கல்லூரி மாணவர்களின் தமிழ்கலைச்சொல்லாக்கத் திறனை வளர்த்தல், தூயதமிழ்ப் பயன்பாட்டை ஊக்குவித்தல், சொற்குவை வலைத்தளப் பயனாளர் எண்ணிக்கையைப் பரவலாக்கல் உள்ளிட்ட இலக்குகளின் அடிப்படையில் தமிழ்நாடு அரசின் சீரிய நெறிப்படுத்தலின்கீழ், செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம் சார்பில் "சொற்குவை மாணவத் தூதுவர் / இளம் அகராதியியலாளர் பயிற்சி" வழங்கப்பட்டுவருகிறது.

இப்பயிற்சியில் அகரமுதலி இயக்கக இயக்குநர் (மு.கூ.பொ.) திருமதி க. பவானி அவர்கள் நோக்கவுரையாற்ற, கல்லூரி முதல்வர் முனைவர் ப.கீ. கிள்ளிவளவன் தலைமையேற்றுச் சிறப்பித்தார். இயற்பியல்துறைத் தலைவர் திரு.க. இராசராசன் அவர்கள் முன்னிலை வகிக்க, வணிகவியல்துறைத் தலைவர் முனைவர் ஜெ. சீனிவாசன் அவர்கள் வாழ்த்துரை வழங்கினார்.

இப்பயிற்சி நிகழ்வில், கல்லூரி முதல்வர் முனைவர் ப.கீ. கிள்ளிவளவன் அவர்கள் 'அகராதியியல்/கலைச்சொல்லாக்கம்' என்னும் பொருண்மையிலும், தமிழ்த்துறைத் தலைவர் முனைவர் சு. மாதவன் அவர்கள் 'மொழிப் பயிற்சி' என்னும் பொருண்மையிலும், தமிழ்த்துறை இணைப்பேராசிரியர் முனைவர் ஆ.அரிகிருஷ்ணன் அவர்கள் 'மொழிபெயர்ப்பு' என்னும் பொருண்மையிலும், உதவிப் பேராசிரியர் முனைவர் கா. இரவிச்சந்திரன் அவர்கள் 'கணினித் தமிழ்' என்னும் பொருண்மையிலும் பயிற்சியளித்தனர்.

அகரமுதலி இயக்ககத் தொகுப்பாளர் திரு. வே. பிரபு வரவேற்புரை வழங்க, தொகுப்பாளர் திருமதி கு. சங்கீதா நன்றியுரை கூறினர். மாணவர்கள், பேராசிரியர்கள், தமிழார்வலர்கள் உள்பட பலர் கலந்துகொண்ட இவ்விரு நிகழ்விலும் பங்கேற்றுப் பயிற்சிபெற்ற மாணவர்களுக்கு அகரமுதலி இயக்ககம் சார்பில், "சொற்குவை மாணவத் தூதுவர்/ இளம் அகராதியியலாளர்' சான்றிதழ்கள் வழங்கப்பட்டன.